18th August 1960]

THE HON. SRI C. SUBRAMANIAM : 'கெஸ்ட் ஹௌஸ்' மஹாபலிபுரத்தில்தான் இருக்கிறது. நம் கைக்கு பணம் வந்து விட்டது. நம் சௌகரியத்திற்காகத்தான் அது நடத்தவும் படுகிறது.

*Poramboke lands*

* 267 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Chief Minister be pleased to state the nature of poramboke lands which the village panchayats in the panchayat union areas can acquire, as ordered by the Government?

THE HON SRI C. SUBRAMANIAM : Under section 86 (2) of the Madras Panchayats Act, 1958, the porambokes classified as grazing grounds, threshing floors, burning and burial grounds, cattle stands, cart stands and topes are statutorily vested in panchayats for purpose of administration for the benefit of the village. Orders have been issued to the Collectors to list out the above items of land and formally place them under the administration of the panchayats concerned.

Under section 86 (4) of the Act, panchayats are empowered to regulate the use of any porambokes other than those referred to above, if the panchayats are authorized in that behalf by Government.

*Higher Secondary Schools*

* 268 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether there is any proposal to convert all high schools into Higher Secondary Schools; and

(*b*) if so, when?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) As a result of the recent reorganization, the three-year Secondary Course is to be replaced by a four-year Higher Secondary Course in Schools. This course will cover new Standards VIII to XI and revised syllabuses for all these standards have been approved. Old Forms IV and V have already been replaced by new standards VIII and IX with effect from 1959–60 and 1960–61, respectively. New Standards X and XI will be opened in 1961–62 and 1962–63, respectively. It may not however, be possible to open the XI Standard in all high schools in the State in 1962–63 and some of them may have to continue as incomplete Higher Secondary Schools coaching up to the new Standard X only.

SRI A. A. RASHEED : May I know what the extra expenditure involved is by such conversion?

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I do not have figures now. If a separate question is put, I will be able to give the figures.

[18th August 1960

**SRI K. ANBAZHAGAN** : *இந்த உயர்தர, நடுத்தரக் கல்வி வகுப்பு ஏற்படுத்துவதற்கு, 11-வது வகுப்பு ஏற்படுத்துவதற்கு என்னென்ன முன் ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது ? அவைகளுக்கான வசதிகள் அரசாங்கத்தினிடம் இருக்கின்றனவா ?*

**THE HON. SRI C. SUBRAMANIAM** : *கட்டிட வசதி செய்ய வேண்டும், லாபரட்டரி வசதி செய்ய வேண்டும், அதற்கான ஆசிரியர்களுக்குப் பயிற்சி கொடுக்க வேண்டும். இவையெல்லாம் பரிசிலனையில் இருக்கின்றன. ஆசிரியர்களுக்கு பயிற்சி கொடுக்கப் பட்டு வருகிறது.*

SRI A. A. RASHEED : May I know whether the Union Government have promised any help for such conversion?

THE HON. SRI C. SUBRAMANIAM : Not for this specific purpose. But we are getting aid from the Government for the various educational schemes.

SRI K. VINAYAKAM : Sir, what are the extraordinary advantages derived in switching on to the new Standard from the old system of Forms? What were the defects noticed by the Department in carrying on with the old system of Forms and what are the reasons which impelled this Government to switch on to this new adventure in the educational system?

MR. SPEAKER : Can a policy matter be discussed during question hour?

THE HON. SRI C. SUBRAMANIAM : I would refer the hon. Member to the various White Papers published and to the discussions which took place in this House in which he has definitely participated.

MR. SPEAKER : Apart from that, it is not possible to ask questions about policy matters during question hour and the hon. Member must realize that the time available for the Hon. Minister to answer is only two minutes.

**SRI K. ANBAZHAGAN** : *இந்த புது உயர்தர வகுப்பு தொடங்குகிறபோது அதற்குத் தேவையான அதிகத் தகுதியுள்ள ஆசிரியர்கள், கல்லூரிகளில் வேலை இல்லாமல் போகிற ஆசிரியர்களை இந்தத் துறையில் நியமிக்க அரசாங்கம் முயற்சி எடுத்துக் கொள்ளுமா ?*

**THE HON. SRI C. SUBRAMANIAM** : *இன்னும் அந்தக் கட்டம் ஏற்படவில்லை. ஏனென்றால், 1962-63 க்குப் பிற்பாடும் இந்த ப்ரீ-யூனிவர்ஸிட்டி கிளாஸ் தொடர்ந்து கல்லூரிகளில் இருந்து கொண்டு வரவேண்டியதாயிருக்கும். ஆகவே இப்பொழுது போதுமான ஆசிரியர்கள் இந்தப் பள்ளிக்கூடங்களுக்குக் கிடைக்காமல் இருக்கலாம் என்ற நிலைமையிருக்கிறது. அதற்காகத்தான் புதுப் பயிற்சி இப்பொழுது கொடுக்கப்பட்டு வருகிறது.*

18th August 1960]

**Sri S. M. ANNAMALAI :** சில உயர்நிலைப் பள்ளிகளில் 11-வது ஸ்டான்டேர்ட் ஆரம்பிக்கப்படுமென்று பதில் சொன்னார்கள். தாலூகாவிற்கு ஒன்று என்று இல்லாது இரண்டு வீதம் ஆரம்பிக்க சர்க்கார் முன்வருவார்களா? ஒன்றுதான் ஆரம்பிக்கப் போவதாக கேள்விப்பட்டேன், அது உண்மையா?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** கேள்விப்பட்டது சரியா இல்லையா என்று தெரியாது. எந்தெந்த இடத்தில் எந்த அடிப் படையில் 1962-63-ல் ஆரம்பிக்கப்படவேண்டுமென்று முடிவு செய்யப்படவில்லை. ஆனால் தொடர்ந்து மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் போதுமான அளவு பள்ளிக்கூடங்கள் எல்லாப் பகுதிகளிலும் ஆரம்பிப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

**Sri N. MARUDACHALAM :** புது உயர்நிலைப் பள்ளிகள் ஏற்படுத்துவதில் அந்தப் பகுதிகளில் உள்ள மக்கள் முன்வந்தால் சர்க்கார் உதவி செய்யுமா?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** அப்படி மக்கள் முன் வருவதை எப்பொழுதும் சர்க்கார் வரவேற்கிறது. ஆனால் அப்படி முன்வருவதால் சௌகரியம் இல்லாத இடங்களில் இதை ஆரம்பிக்க முடியாது. அந்தந்தப் பள்ளிக்கூடங்களைப் பொறுத்து இப்பொழுதுள்ள சௌகரியங்களுக்குமேல் என்ன சௌகரியங்கள் செய்து கொடுக்க மக்கள் தயாராயிருக்கிறார்கள் என்பதைப் பொறுத்து முடிவு செய்யவேண்டியிருக்கிறது.

**Sri K. ANBAZHAGAN :** இந்த உயர்தர நடுநிலைப் பள்ளிகளில் உயர்தர வகுப்புக்குரிய பாட திட்டமும், ப்ரீ-யூனிவர்ஸிடி பாட திட்டமும் ஏறத்தாழ ஒரளவாக அமைந்திருக்கிறதா? அப்படி யானால் இதற்கான தமிழ்ப் பாடப் புத்தகங்களை இப்பொழுதே தயாரிக்க ஏதாவது முயற்சியுண்டா?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** பதினோராவது வகுப்பு முடிகிறபோது, ப்ரீ-யூனிவர்ஸிட்டியில் படித்து வெளி வருகிறவர் களின் கல்வித்தரம் இவர்களுக்கு ஏற்படவேண்டுமென்பதுதான் இதன் நோக்கம். அதற்கான புத்தகங்கள் தயாராகிக் கொண்டிருக்கின்றன.

### *Scavengers*

* 269 *Q.*—Sri P. G. MANICKAM : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) மல, மூத்திரங்களை நகர சுத்தியாளர்கள் தலைச் சுமையாகக் கொண்டுபோகும் வழக்கத்தை ஒழிப்பதற்காக ஆராய்ந்தறிய சர்க்காரால் நியமிக்கப்பட்ட ஆலோசனை போர்டின் அறிக்கையானது சர்க்காருக்குக் கிடைத்துவிட்டதா?